# ஸ்ரீ வேங்கடேச மகாத்மியம்

32/1

உ. கோவிலூர்
KOVILOOR
MADALAYAM
மடாலயம்

8136

வ:38

நெ. சி. தெய்வசிகாமணி

**வெஸ்ட் பப்ளிகேஷன்ஸ்**

32, ஐயப்ப செட்டித் தெரு, மண்ணடி,

சென்னை—600 001.

# 1

கங்கை நதிக் கரையில் கச்சியபர் முதலிய முனிவர்களும், தவசிகளும் உலகம் உய்யும்பொருட்டு மகா வேள்வி ஒன்றை நடத்திக்கொண்டிருந்தார்கள். அச்சமயம் அங்கு நாரத முனிவர் வந்தார்.

நாரத முனிவரைக் கண்டதும் கச்சியபரும் மற்றவர்களும் அவரை வரவேற்று உபசரித்தனர்.

சிறிதுநேரம் உரையாடிய பின் நாரத முனிவர் கச்சியபரை நோக்கி, "முனிபுங்கவரே! நீங்கள் உலகின் நன்மைக்காக மகாவேள்வியை நடத்துகிறீர்கள். வேள்வி முடிந்ததும் அதன் பலனை இறைவனுக்கு அளிக்கப்போகிறீர்கள். அவ்வாறு அளிக்கும்போது தீர ஆலோசித்து, மும்மூர்த்திகளில் எவர் மக்கள்பால் அன்பு கொண்டு மோட்ச உலகத்தை அளிக்கும் ஆற்றல் கொண்டிருக்கிறாரோ, அவருக்கே உங்கள் யாகத்தின் பலனை அளியுங்கள்" என்றார்.

முனிவர்களும் நாரதரின் உரையைக் கேட்ட பிறகு, மும்மூர்த்திகளையும் சோதனை செய்து, அவர்களில் எவர் மக்கள்பால் அதிக அன்பு கொண்டிருக்கிறார் என்று அறிந்து வர முயன்றனர். இதற்காகப் பிருகு முனிவரைத் தேர்ந்தெடுத்து அவரை மூவுலகங்களுக்கும் சென்று பிரமன், விஷ்ணு, உருத்திரன் ஆகிய மும்

மூர்த்திகளையும் சோதனை செய்து பார்த்துவர அனுப்பினர்.

பிருகு முனிவர் முதலில் சத்தியலோகத்திற்குச் சென்றார். பிரமதேவன் அலங்கார மண்டபத்தில் அமர்ந்துகொண்டு படைப்புத் தொழிலைச் செய்து கொண்டிருந்தார். தம் சபைக்கு வந்த பிருகு முனிவரை வரவேற்காமல், அவர் தம்முடைய காரியத்திலேயே கண்ணாயிருந்தார். நீண்டநேரம் காத்திருந்த பிருகு முனிவர் எதிரே இருந்த ஆசனத்தில் அமர்ந்தார்

இது நான்முகனுக்குப் பொறுக்கவில்லை. தம்மைப் பிருகு முனிவர் அவமானம் செய்துவிட்டதாகக் கருதினார். கோபத்தால் அவர் முகமும் கண்ணும் சிவந்தன.

இதனைக் கண்ட பிருகு முனிவர், "நான்முகனே! உன் சபை தேடிவந்த என்னை வருக வென்றும் அழைக்கவில்லை; உட்காரச் சொல்லி ஆசனமும் அளிக்கவில்லை. இந் நிலையில் உனக்குக் கோபம் வருவது எனக்கு வியப்பை அளிக்கிறது. தம் இருப்பிடம் தேடி வருபவர் எவராயிருந்தாலும் அவரை வரவேற்று உபசரிக்க வேண்டியது பெரியோர் கடமை. இக்கடமையைச் செய்வதினின்றும் நீ தவறி விட்டாய். எனவே, உனக்குப் பூவுலகில் கோயில்கள் இருக்காமல் போகட்டும். வந்தவரை உபசரித்துப் பூசிக்காத உன்னை மக்கள் எவரும் வணங்கார்" என்றி சாபமிட்டுவிட்டுச் சென்றார்.

பிறகு, பிருகு முனிவர் கயிலை மலைக்குச் சென்றார். அங்கே பரமசிவன் அந்தப்புரத்தில் பார்வதி தேவியாருடன் உரையாடிக் கொண்டிருந்தார். அச் சமயத்தில்

பிருகு முனிவர் நேரே அந்தப்புரத்திற்கே சென்று விட்டார். இது சிவபிரானுக்குக் கோபத்தை அளித்தது.

'தனிமையில் இருக்கும்போது இவர் இங்கிதம் தெரியாமல் வந்துவிட்டாரே' என்று பிருகு முனிவர் பேரில் கோபம் கொண்டார் சிவனூர்.

இதனை அறிந்துகொண்ட பிருகு முனிவர், ''முக் கண்ணா, மக்கள்பால் அன்பு செலுத்தி அவர்களை நல் வழிப்படுத்துவது உன் கடன். அதை விட்டுவிட்டுப் போக போக்கியத்தில் சுகித்திருக்கும் உன்னைப் பூவுல கில் உள்ள மக்கள் அனைவரும் இலிங்க வடிவிலேயே பூசிக்கக் கடவர்'' என்று கூறிவிட்டு, நேரே பரந் தாமனைக் காண வைகுண்டத்திற்குச் சென்றூர்.

அங்கே திருமால் ஆதிசேஷன்மேல் சயனித்திருந் தார். கண்களை மூடியபடியே இருந்தாலும் பிருகு முனி வர் வருவதை அறிந்துகொண்டார். பிருகு முனிவர் அவர் எதிரே சற்றுநேரம் நின்றூர். திருமால் எழுந் திருக்கவில்லை. உடனே கோபம் கொண்ட பிருகு முனிவர் திருமாலின் மார்பிலே எட்டி உதைத்து அவரை எழுப்பினூர்.

உடனே விழித்தெழுந்த மகாவிஷ்ணு பிருகு முனி வரின் கால்களைப் பிடித்துக்கொண்டார்.

''குழந்தாய், ஒரு வார்த்தை கூறியிருந்தால் நானே எழுந்திருப்பேனே ! இதற்காகவா இந்தப் பூப் போன்ற பாதத்தால் என்னை உதைத்து எழுப்பினுய். என் உடல் வச்சிரம் போன்றது. அதில் பட்ட உன் பாதம் மிகவும் துன்புற்றிருக்குமே ! குழந்தாய், வலி யெடுக்கிறதா ? இப்படி என் மடிமேல் அமர்ந்து கொள், உன் காலைப்

பிடித்து விடுகிறேன்'' என்று பிருகு முனிவரைப் பார்த்துக் கூறினர், திருமால்.

மகாவிஷ்ணுவின் அன்பு மொழிகள் பிருகு முனிவரின் உள்ளத்தைக் கவர்ந்தது. அவர் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்தது. திருமாலின் கால்களைப் பற்றிக்கொண்டு, ''இறைவா ! இச் சிறியவன் செயலை மன்னித்துவிடு. உலகிலுள்ள மக்களபால் அன்பு செலுத்தி அவர்களுக்கு மோட்சத்தை அளிக்கக்கூடிய கடவுள் யார் என்பதை அறிவதற்காகவே இவ்விதம் செய்தேன். இந்த ஏழையை மன்னித்துவிடு'' என்ருர் பிருகு முனிவர்.

பிருகு முனிவரை ஆசீர்வதித்து அவரை மன்னித்து அனுப்பினுர் மகாவிஷ்ணு.

பிருகு முனிவர் கங்கைக் கரையை அடைந்து கச்சியபர் முதலான முனிவர்களிடம், ''மகாவிஷ்ணுவே மக்கள்பால் அன்பும் பிரியமும் உள்ளவர். அவரே மக்களுக்கு மோட்சத்தை அளித்து அவர்களை உய்விக்கக் கூடியவர். அத்தகைய குணங்கள் நிரம்பிய எம் பெருமான் மகாவிஷ்ணுவுக்கே யாகத்தின் பலனை அளியுங்கள்'' என்று கூறினுர்.

பிருகு முனிவர் திருமாலை உதைத்ததால் இலட்சுமி தேவி மிகவும் கோபம் கொண்டிருந்தார்

''நாதா, தங்கள் மார்பில் வசிக்கும் என்னை ஓர் ஏழைப் பிராமணன் கால்களால் உதைப்பதா ? அவ்வாறு உதைத்து என்னை அவமானப்படுத்தியவனைத் தாங்கள் கண்டிக்காமல், உதைக்கும் காலுக்கு முத்தமிடுவது போல் அவனிடம் அன்பு காட்டி அனுப்பினீர்.

கள். இனி நான் இங்கிருக்கமாட்டேன்'' என்று கோபத்துடன் கூறியவாறு பூவுலகம் அடைந்து, கொல்லாபுரம் என்ற ஊரில் வசித்து வரலானுர்.

திருமாலே விட்டு இலட்சுமி தேவி பிரிந்து சென்றதும் பாற்கடல் முழுவதும் சோபை இழந்துவிட்டது. திருமால் பித்துப்பிடித்தவர் போலானுா. பிறகு அங்கிருக்கப் பிடிக்காமல் அவரும் பூலோகத்தை நோக்கிச் சென்ருர்.



மகாவிஷ்ணு கண்ணனாக அவதரித்திருக்கையில் யசோதையிடம் நீண்ட நாட்கள் வளர்ந்தார். பிறகு திருமணமானதும் வளர்ப்புத்தாய் யசோதையை மறந்து தம் தேவிமார்களுடன் வாழ்ந்து வந்தார்.

கடைசி காலத்தில் யசோதை கண்ணபெருமானிடம், ''கண்ணா, உன்னைச் சிறிய வயதில் அன்புடன் வளர்த்தேன். நீ பெரியவனானதும் என்னை அடியோடு மறந்து சென்றுவிட்டாய். மீண்டும் உன்னைப் பேணி வளர்க்கும் வாய்ப்பு எனக்குக் கிடைக்காதா ?'' என்று வருந்திக் கூறினாள்.

''தாயே, கவலையுற வேண்டாம். நான் பூலோகத்தில் வேங்கடேசனாக அவதரிக்கும்பொழுது தாங்கள் வகுளா தேவியாக வந்து எனக்குத் தொண்டு புரிவீர்கள்'' என்று கூறினார்.

அதன்படி யசோதா தேவி வேங்கடமலையில் வகுளாதேவியாக அவதரித்து வளர்ந்து வந்தாள்.

வைகுந்தத்தை விட்டுக் கிளம்பிய பரந்தாமன் இலட்சுமி தேவியைப் பிரிந்த துக்கத்தினால் பூவுலகை அடைந்தார். பல இடங்களிலும் பித்துப்பிடித்தவர்போல் சுற்றினார். எந்த இடமும் அவருக்குப் பிடிக்கவில்லை. முடிவில் வேங்கடமலைக்கு வந்தார். அந்த மலையில்

உள்ள வனங்களும் நீர்ச்சுனைகளும் அவர் உள்ளத்தைக் கொள்ளை கொண்டன. மலைமேல் உள்ள புஷ்கரணி தீர்ததக்கரையில் உள்ள ஒரு புளிய மரத்தின் பொந் தைத் தம் இருப்பிடமாகக் கொண்டார் பரந்தாமன்.

ஒரு நாள் வேங்கடமலையில் வாசம் செய்யும் வராகப்பெருமான் புற்றிலிருந்து வெளிப்படும் வேங்க டேசனைக் கண்டார்.

"திருமாலே, வைகுந்தத்தைவிட்டு நீர் இங்கு வரக் காரணம் என்ன?" என்று திருமாலைப் பார்த்துக் கேட்டார் வராகப்பெருமான்.

"வராகமூர்த்தி, ஒரு நாள் பிருகு முனிவர் என் மேல் கோபம் கொண்டு என் மார்பில் உதைத்தார். அதனால் கோபம் கொண்டு இலட்சுமி தேவியானவள் என்னை விட்டுப் பிரிந்து சென்று கொல்லாபுரத்தில் வசித்து வருகிறாள். நான் வைகுண்டத்தில் இருக்கப் பிடிக்காமல் இங்கு வந்துவிட்டேன். எனவே நான் வசதியாக இருக்கக்கூடிய ஓர் இடத்தை நீங்கள் எனக்குத் தரவேண்டும்" என்று வராகமூர்த்தியைக் கேட்டுக்கொண்டார் மகாவிஷ்ணு.

"இலவசமாக எப்படி இடம் தரமுடியும்? ஏதாவது விலை கொடுத்துப் பெற்றுக்கொள்ளும்" என்றார் வராக மூர்த்தி.

"வராகமூர்த்தி, இலட்சுமிதேவி என்னை விட்டுப் பிரிந்ததனால் நான் மிகவும் ஏழையாகி விட்டேன். இப்போது என்னிடம் ஒன்றும் கிடையாது. ஆனால் நான் இங்கே வாசம் செய்தாலும் உமக்கு நிவேதனம் செய்த பின்னரே எனக்கு நிவேதனம் செய்யும்படியும்,

பக்தர்கள் முதலில் உம்மைக் கண்ட பிறகே என்னைக் காணவேண்டும் என்றும் செய்விப்பேன். இதுதான் நீர் கொடுக்கக்கூடிய இடத்துக்கு நான் அளிக்கும் விலை'' என்றார் திருமால்.

அவர் மேல் அன்புகொண்ட ஆதிவராகப் பெருமான் வேங்கடேசனாக வந்திருக்கும் திருமாலுக்கு வேங்கடமலையில் ஓர் இடத்தை அளித்தார். இதைத் தவிர தம்மிடம் பணிபுரியும் வகுளாதேவியையும் வேங்கடவனிடம் அனுப்பி அவருக்குத் தொண்டு புரியுமாறு கூறினார்.

முன் பிறவியில் யசோதையாக இருந்த வகுளா தேவி, மீண்டும் வேங்கடேசனான திருமாலுக்குத் தொண்டு புரியும் பாக்கியத்தைப் பெற்றாள்.



3

இராவணன் ஒரு முறை வேதவதி என்ற பெண் மணியிடம் தகாத முறையில் நடந்துகொள்ள முயன்றுன். அதனைக் கண்ட அவள் கோபம் கொண்டு, "உன் குலத்தை வேருடன் அழித்து விடுகிறேன்" என்று வஞ்சினம் கூறிவிட்டு அக்கினி பகவானை அடைக்கலமாக அடைந்தாள்.

அக்கினி பகவான் அவளுக்கு ஆறுதல் கூறிக் காப்பாற்றி வந்தார்.

இராமபிரான் தன் தம்பி இலக்குவனோடும் துணைவி சீதா பிராட்டியாருடனும் தணடகாரண்யத்தில் இருந்த போது, இராவணன் மாயத்துறவி வேடங் கொண்டு சீதையை அபகரித்துச் செல்லக் கருதினுன். இதற்காக மாரீசனை அனுப்பி இராமபிரானையும் இலக்குவனையும் சீதையைத் தனியே விட்டுப் பிரியுமாறு செய்தான். அச்சமயத்தில் அக்கினிதேவன் தன்னிடமிருந்த வேத வதியைச் சீதாபிராட்டியாக்கி அவளைத் தண்ட கராண்யத்தில் விட்டுவிட்டு, உண்மைச் சீதையைத் தான் கொண்டு சென்றுவிட்டான்.

இராவணன் மாண்ட பிறகு சீதையை மீட்டு வந்த இராமபிரான் உலகோர் கூறிய அபவாதத்தைத் தாங்க மாட்டாமல் வேதவதியாகிய சீதையை அக்கினிப் பிரவேசம் செய்து வருமாறு கூறினுர்.

வேதவதியாகிய சீதையும் இராமபிரான் சொற்படி அக்கினிப் பிரவேசம் செய்தாள். அடுத்த கணம் அக்கினிபகவான் தம்மிடம் இத்தனை காலமும் காப்பாற்றி வைத்திருந்த உண்மைச் சீதையையும் வேதவதியையும் வெளியே கொண்டு வந்து சேர்ப்பித்தார்.

ஒரே சாயலில் உள்ள இரண்டு சீதைகளைக் கண்டதும் இராமபிரான் திகைத்துவிட்டார்.

" நாதா, இவள் வேதவதி என்பவள். இராவணன் ஒரு தடவை இவளை அவமானப்படுத்த நினைத்ததால் இவள் அவன் குலத்தை வேரோடு அழித்துவிடுவதாகச் சபதம் கூறினாள். அதன்படியே இராவணன் என்னை எடுத்துச் செல்ல முயன்றபோது இவள் எனக்குப் பதில் இராவணனோடு சென்று இலங்கையில் படாத பாடு பட்டாள். இவ்வாறு நமக்காக அசோக வனத்தில் பெரிதும் துன்பப்பட்ட இவளையும் நீங்கள் பத்தினியாக ஏற்றுக்கொள்ள வேண்டும் " என்றாள் உண்மைச் சீதை.

" தேவி, இந்த இராமாவதாரத்தில் நான் ஏக பத்தினி விரதன் என்கிற செய்தி உனக்குத் தெரியாததன்று. கலியுகத்தில் நாம் வேங்கடேசனாக அவதரிப்போம். அப்போது இந்த வேதவதி ஆகாச ராஜனின் மகளாக—பத்மாவதியாகப் பிறப்பாள். அப்போது இவளைத் திருமணம் செய்து கொள்வோம் " என்றார்.

இவ்வாறு இறைவனின் திருவருட்படி வேதவதி கலியுகத்தில் பத்மாவதியாக அவதரித்தாள்.

ஆகாசராஜனுக்கு நீண்ட நாட்களாகக் குழந்தைப் பேறு இல்லை. தன்னுடைய குலகுருவாகிய பிரகஸ்பதியாரிடம் தன் குறையைக் கூறி வருந்தினான்.

"அரசே கவலையை ஒழி. தசரதனும் புத்திர காமேஷ்டி யாகம் செய்து பிள்ளைப் பேறு பெற்றான். நீயும் அவ்விதமாகவே யாகம் செய்து சந்தான பாக்கியத்தைப் பெறலாம்" என்றார் பிரகஸ்பதி.

ஆகாச ராஜனும் புத்திர காமேஷ்டி யாகம் செய்வதற்காக ஓர் இடத்தைத் தேர்ந்தெடுத்து, நல்ல நாளில் முனிவர்கள், மந்திரிகள் புடைசூழ அந்த இடத்தைத் தங்கக் கலப்பையால் உழுதான்.

தங்கக் கலப்பையால் உழும்போது ஓர் இடத்தில் ஏர் முனை மேலே செல்லமாட்டாமல் அப்படியே நின்று விட்டது. ஆகாசராஜன் உழுவதை விட்டுவிட்டுப் பூமியில் பார்க்க, அவ்விடத்தில் ஆயிரம் இதழ்களை உடைய ஒரு தாமரைப் பூவில் இலட்சுமிதேவியைப் போன்ற ஒரு குழந்தை கோடி சூரியப் பிரகாச ஒளியுடன் இருந்தது.

அக் குழந்தையைக் கண்ட மன்னன் ஆனந்தம் அடைந்தான். குழந்தையை வாரியணைத்துக் 'கொண்டான். மகிழ்ச்சிக் கூத்தாடினான்.

இறைவனே தன் குறை தீர்க்க இக் குழந்தையைத் தனக்கு அளித்ததாக மகிழ்ந்தான். வீட்டுக்கு எடுத்துச் சென்று மனைவி தரணி தேவியிடம் அக் குழந்தையைக் கொடுத்தான். அவளும் அக மகிழ்ந்து அக்குழந்தையை வளர்த்து வரலானாள்.

தாமரை மலரில் கிடைத்த குழந்தையாகையால் அக்குழந்தைக்குப் பத்மாவதி என்ற திருப் பெயரிட்டுச் செல்லமாக வளர்த்து வந்தனர், ஆகாச ராஜனும் அவன் மனைவியும்.

பத்மாவதி வந்த வேளை ஆகாசராஜனுக்கு மற்று மோர் அதிர்ஷ்டத்தைக் கொடுத்தது. இத்தனை நாட்க ளாக மகப்பேறு இல்லாமல் வருந்திய தரணி தேவி கருத்தரித்தாள். பத்தாவது மாதம் ஓர் அழகிய ஆண் குழந்தையை ஈன்றெடுத்தாள். அக் குழந்தைக்கு வசுதானன என்ற பெயர் சூட்டி ஆகாசராஜனும் தரணி தேவியும் வளர்த்து வந்தனர்.

பத்மாவதி தேவி வந்ததால்தான் நமக்கு மகன் பிறந்தான் என்ற நம்பிக்கையுடன் அரசனும் அரசியும் பத்மாவதியின் பேரில் உயிரையே வைத்து வளர்த்து வந்தனர்.



## 4

ஒருநாள் வேங்கடேசப் பெருமாளுக்கு வேட்டை யாடி வரவேண்டும் என்ற விருப்பம் தோன்றியது. உடனே காலைக் கடன்களை முடித்துவிட்டுத் தம்மை அலங்கரித்துக் கொண்டார். வகுளா தேவி அன்புடன் கொண்டுவந்து கொடுத்த சிற்றுண்டியைச் சாப்பிட் டார். தாம்பூலம் தரித்துக்கொண்டார். பின்னர் ஓர் அழகிய குதிரையை வரவழைத்தார். அதன்மீது ஏறி அமர்ந்துகொண்டு வேங்கடமலையிலிருந்து வேட்டை யாடுவதற்காகப் புறப்பட்டார்.

வழியில் சிங்கம் புலி முதலிய கொடிய மிருகங் களை வேட்டையாடிய வேங்கடேசப் பெருமாளின் எதிரே ஒரு மூர்க்கமான மதயானை தென்பட்டது. அதைக் கொல்லக் கருதி அதனைப் பின் தொடர்ந்தார். வெகுதூரம் ஓடிய யானை வேங்கடமலையை விட்டு ஆகாச ராஜன் ஆட்சி புரியும் திருச்சானூர் வரை சென்றுவிட்டது. வேங்கடேசப் பெருமாளும் விடாமல் அதைத் துரத்திச் சென்றார்.

முதலில் அந்த மதம் பிடித்த யானை ஆகாச ராஜ னின் மகள் பத்மாவதி தம் தோழியருடன் விளையாடிக் கொண்டிருக்கும் தோட்டத்தருகில் வந்ததும் திடீ ரென்று மறைந்துவிட்டது.

வேங்கடேசப் பெருமாள் யானையைத் தேடித் தோட்டத்திற்குள் சென்றார். அங்கு தம் தோழியருடன் விளையாடிக்கொண்டிருந்த பத்மாவதி தேவியைப் பார்த்தார்.

பிற ஆடவன் ஒருவன் இளவரசியின் தோட்டத்திற்குள் நுழைந்ததைக் கண்ட தோழியர்கள் வேங்கடேசப் பெருமாளை உள்ளே வர விடாதவாறு தடுத்தனர். வேங்கடேசப்பெருமாள் அவ்விடத்தை விட்டுப் போகாமல் அங்கேயே வெகுநேரம் நின்றுகொண்டிருந்தார்.

இதனால் கோபம்கொண்ட தோழியரும் பத்மாதேவியும் கற்களை எறிந்து அவரைத் துரத்தினர். கல்லடி பட்டதால் அவருடைய குதிரை கீழே விழுந்து இறந்து விட்டது. வேங்கடப்பெருாமள் குதிரையை இழந்து கால்நடையாக வேங்கடமலைக்கு வந்து சேர்ந்தார்.

போகும்போது மிகுந்த மகிழ்ச்சியுடன் சென்ற வேங்கடப்பெருமாள் வரும்பொழுது மிகுந்த சோகத்துடன் வந்ததை வகுளாதேவி கண்டுவிட்டாள். அவள் மனம் பதறியது.

"வேங்கடவா, உனக்கு உற்ற துயரம் என்ன? உன்னுடைய குதிரை எங்கே? உடம்பெல்லாம் காயமாயிருக்கிறதே! இஃது என்ன? இந்தக் கோலத்திற்கு உன்னை ஆளாக்கியது யார்!" என்று வகுளாதேவி வேங்கடேசப்பெருமாளைக் கேட்டாள்.

"தாயே, இம்மாதிரிக் கோலத்திற்கு என்னை வேறு எவராவது ஆளாக்கியிருந்தால் அவர்களை அந்நேரமே நிர்மூலமாக்கி யிருப்பேன். ஆனால், பாவம் ஒரு பேதைப்

பெண் என் குதிரையை அடித்துக் கொன்றுவிட்டு என்னை இந்த நிலைக்கு ஆக்கிவிட்டாள்'' என்ருர் வேங்கடேசப்பெருமாள்.

"உன்னை இவ்வாறு செய்தது ஒரு பெண் பிள்ளையா ? அவளுககு என்ன துணிச்சல்? யார் அவள்? சொல். இப்பொழுதே நியாயம் கேட்டு வருகிறேன்'' என்று துள்ளி எழுந்தாள் வகுளாதேவி.

"தாயே, அவளிடம் சண்டைபோடச் செல்வதில் எவ்விதப் பயனும் இல்லை. அவள் எனக்கு மனைவியாக வரவேண்டியவள். திருமணம் ஆனபிறகு போட வேண்டிய சண்டையை முன் கூட்டியே போட்டிருக் கிருள். பரவாயில்லை. இப் பிறப்பில நான் மணந்து கொண்டால் அவளைத்தான் மணந்துகொள்வேன் '' என்ருர் வேங்கடேசபபெருமாள்.

"அப்படியா ? உன்னை மணககக்கூடிய பாக்கியத் தைச் செய்த அந்தப் பெண்மணி யார் ? அவள் எங் கிருக்கிருள் ? சொல். உடனே போய் அவளைப் பார்க்க வேண்டும் என்ற ஆவல் என் உள்ளத்தே எழுகிறது '' என்ருள் வகுளாதேவி.

"இந்த வேங்கடமலையை விட்டு இறங்கித் தெற்கு நோக்கி ஒன்றரை காத தூரம் சென்ருல் அங்கு நாராயணபுரம என்ற ஊர் உள்ளது. அதை ஆட்சி புரியும் ஆகாச ராஜனின மகளதான நான் சொலலும் பெண். அவள் பெயர் பத்மாவதி. அவளதான என்னை இந்தக் கோலத்திற்கு ஆளாக்கினுள்'' என்ருர், வேங்கடேசப்பெருமாள்.

"உன் பெருமை அறியாமல் உன்னை இந்தக் கோலத்திற்கு ஆளாக்கி விட்டாள். நீ கவலையை விட்டு

நிம்மதியாக இரு. நான் நாராயணபுரம் சென்று எவ்வித மாயினும் பத்மாவதியையும் அவளுடைய பெற்ருேரை யும் கண்டு உனக்குப் பத்மாவதி தேவியை மணமுடித்து வைக்குமாறு கூறுகிறேன்'' என்ருள் வகுளாதேவி.

''அவ்விதமே செய். வேங்கடமலையை விட்டு இறங்கியதும் முதலில் அங்கேயிருக்கும் கயில தீர்த்தத் தில் முழுகிவிட்டு, அதன் பக்கத்தில் உள்ள கபிலேஸ் வரரை வணங்கிவிட்டுப் பிறகு திருச்சானூர் செல். உன் காரியம் வெற்றிபெறும்'' என்ருர் வேங்கடேசப் பெருமாள்.

வகுளாதேவியும் வேங்கடேசப்பெருமாள் கூறிய வாறே வேங்கடமலையை விட்டு இறங்கி முதலில் கபிலதீர்த்தத்தில் முழுகிவிட்டுக் கபிலேஸ்வரர் ஆலயத்திற்குச் சென்ருள்.

அங்கு பத்மாவதியின் தோழியர் கபிலேஸ்வரருக் குப் பூசை செய்து தொழுதுகொண்டிருந்தனர்.

வகுளாதேவி அவர்கள் யாரென்று விசாரிக்க, ''தாயே, நாங்கள் ஆகாச ராஜனின் செல்வப் புதல்வி யான பத்மாவதி தேவியின் தோழியர்கள். நேற்று எங்கள் இளவரசியும் நாங்களும் தோட்டத்தில் விளை யாடிக் கொண்டிருக்கும்போது ஓர் அழகிய வாலிபன் குதிரைமீது வந்தான். பித்துப் பிடித்தவன்போல் வெகு நேரம் எங்கள் இளவரசியையே பார்த்துக்கொண்டிருந் தான். எவ்வளவு சொல்லியும் கேளாமல் இருந்ததால் கோபம் கொண்ட எங்கள் இளவரசியாரும் நாங்களும் கற்களால் அடித்து அந்த வாலிபனைத் துரத்திஞேம். கல்லடிபட்ட அவனுடைய குதிரை கீழே விழுந்து உயிரை விட்டது.

அந்த வீரன் சென்றதிலிருந்து எங்கள் இளவரசி யார் படுத்த படுக்கையாகி விட்டார். நோயினால் பிதற்றுகிறார். அவர் நோய் தீர்வதற்காக இங்கே இறைவனை வேண்டிக்கொள்ள வந்திருக்கிறோம் " என்றனர் பத்மாவதியின் தோழியர்.

அவர்கள் சொல்லியதைக் கேட்ட வகுளாதேவி 'பழம் நழுவிப் பாலில் விழுந்தது' என்று எண்ணியவளாக, " பாங்கிமார்களே, நான் வேங்கடமலையில் வாசம் செய்யும் ஸ்ரீ வேங்கடேசப் பெருமாளுக்குத் தொண்டு செய்பவள். நேற்று வேட்டைக்கு வந்தவர் வேங்கடேசர்தான். அவர் இன்னாரென்று நீங்கள் அறிந்துகொண்டிருந்தால் அவரை இவ்வாறு கல்லால் அடித்துத் துன்புறுத்தி யிருக்கமாட்டீர்கள்.

அவருடைய தாய் தேவகி. தந்தை வசுதேவர். அவருடன் பிறந்த அண்ணன் பலராமர். எல்லோருக்கும் எல்லா நலன்களையும் கொடுக்கக்கூடியவர் அவர் அருள் இருந்தாலே போதும். அப்படிப்பட்டவரை இன்னாரென்று தெரிந்துகொள்ளாமல், நீங்கள் அடித்துத் துன்புறுத்தி விட்டீர்கள். இம்மாதிரிச் செய்கையை வேறு எவராவது செய்திருந்தால் அவர்களை, அக்கணமே அவர் நீர்மூலமாக்கி யிருப்பார். தங்கள் இளவரசியார்பேரில் உள்ள அன்பினால் உங்களை மன்னித்து விட்டார் " என்றாள் வகுளாதேவி.

" தாயே, எங்கள் இளவரசியாரும் நாங்களும் அவர் இன்னாரென்று அறியாமல் அவரைத் துன்புறுத்தி விட்டோம். எங்கள் இளவரசியாரும் பிறகு மிகவும் வருந்தினார். அந்த வருத்தத்தினால் அவளுக்குச் சுரம் கண்டுவிட்டது. தாம் செய்த செய்கையை

நினைத்துப் பிதற்றிக் கொண்டிருக்கிறார்" என்றாள் தோழியரில் ஒருத்தி.

"சரி, நடந்தது நடந்துவிட்டது. இனி நடக்க வேண்டியதைக் கவனிப்போம். என்னை உங்கள் அரசியாரிடம் அழைத்துச் செல்லுங்கள். நான் அவரிடம் பேசி உங்கள் இளவரசியாரை எங்கள் வேங்கடேசருக்குத் திருமணம் செய்து தருமாறு கேட்கிறேன்" என்றாள் வகுளாதேவி.

"அது முடிகிற காரியமா? ஊர் பேர் தெரியாத ஒருவருக்கு எங்கள் இளவரசியாரைத் திருமணம் செய்துதர எங்கள் அரசியார் ஒப்புவார்களா?" என்றாள் தோழியரில் ஒருவள்.

"எங்கள் வேங்கடேசரைத் திருமணம் செய்து கொள்ள உங்கள் பத்மாவதி பாக்கியம் செய்திருக்க வேண்டும். என்னை அரசியாரிடம் கூட்டிச் செல்லுங்கள். நான் பேசிக் கொள்கிறேன்" என்றாள் வகுளாதேவி.

இதற்கிடையில் பகவான் வேங்கடேசர் குறத்தி வடிவம் கொண்டு ஆகாசராஜன் ஆட்சி புரியும் நாராயணபுரம் சென்றார் அரண்மனைப் பக்கம் சென்றபோது குறத்தி வேடத்திலிருந்த எம்பெருமானைப் பணிப்பெண் ஒருத்தி வந்து அரசியார் அழைப்பதாகக் கூறினாள்.

குறத்தி வேடத்திலிருந்த எம்பெருமானைப் பார்த்து அரசி தரணிதேவியார், "குறத்தி, என் மகள் பத்மாவதி தேவி நேற்று முதல் படுத்த படுக்கையாக இருக்கிறாள். இதன் காரணம் என்னவென்று சொல்லுவாயா?" என்று கேட்டாள்.

" அரசியாரே, இது மட்டுமல்ல. முக்காலமும் அறிந்து சொல்லுவேன். உங்கள் மகளிடம் என்னை அழைத்துச் செல்லுங்கள். அவள் கையைப் பார்த்து உங்கள் மகளின் நோய்க்குக் காரணம் என்னவென்றும். அது தீர்வதற்கு உரிய உபாயமும் கூறுகிறேன் " என்ருள் குறத்தி.

உ. கோவிலூர் KOVILOOR MADALAYAM மடாலயம்

தரணி தேவியார் பத்மாவதியிடம் குறத்தியை அழைத்துச் சென்ருள் குறத்தி இளவரசியின் கையைப் பார்த்துவிட்டு, " தாயே, நேற்று இவளும் இவள் தோழியர்களும் தோட்டத்தில் விளையாடிக் கொண்டிருக்கும் போது அவ்வழியே வீரன் ஒருவன் வந்தது உண்மையா என்று உங்கள் மகளைக் கேளுங்கள்" என்று சொல்ல, தரணிதேவியார் பத்மாவதி தேவியைப் பார்க்க, அவளும் " ஆம் " என்பதற்கறிகுறியாகத் தலையை ஆட்டினுள்.

" உங்கள் மகளும் தோழியர்களும் தோட்டத்திற்குள் புக முயன்ற அந்த வீரனைக் கல்லால் அடித்துக் காயப்படுத்தி விட்டனர். அது மட்டுமன்று அந்த வீரனின் குதிரையைக்கூடக் கல்லால் அடித்துக் கொன்றுவிட்டனர் " என்ருள் குறத்தி.

" இவள் சொல்லுவது உண்மையா அம்மா !" என்ருள் தரணிதேவி.

" ஆமாம் " என்று தலையை ஆட்டினுள் பத்மாவதி தேவி

" அரசகுலப் பெண்கள் பக்கம் வந்ததே தவறு, சரியான தண்டனைதான் கொடுத்தாய் " என்ருள் தரணிதேவி.

'தண்டனையை அந்த வீரனுக்கு தரவில்லை தனக்கே கொடுத்துக் கொண்டிருக்கிருள். அதனுல் தான் அவளுக்குச் சுரம் வந்து படுத்த படுக்கையாகி விட்டாள். இவள் எந்த வீரனை அடித்துத் துரத் திளுளோ அந்த வீரன் இவளை மணந்து மன்னித்தா லொழிய இவள் நோய் தீராது'' என்ருள் குறத்தி.

'' இஃது என்ன வைத்தியம் ! எவனே ஒருவன்— அரசகுலப் பெண்கள் இருக்கும் இடத்திற்கே வந்தான் அதுவே தகாத செயல். அவனைக் கண்டுபிடித்துத் தண்டனை கொடுக்கவேண்டும். அதைவிட்டு அவனை அழைத்து அவனுக்கா என் திருமகளை மணமுடித்துத் தரச் சொல்லுகிருய் ?'' என்று கோபமாகக் கூறினுள் தரணி தேவி.

''தாயே, அவனை விட்டால் அவளுக்கு வேறு மாப்பிள்ளை கிடைப்பது அரிது. மூவுலகங்களிலும் தேடினுலும் அம்மாதிரியான மாப்பிள்ளையை நீ அடைய மாட்டாய். அவனுக்கு உன் மகளை மணம் செய்து கொடுத்தால் உன் மகளின் நோயும் குணமாகும். உன் குலமும் புகழ் பெற்று விளங்கும்'' என்ருள், குறத்தி.

''குறத்தி, நீ சொல்வது உண்மையா ? அவனைத் தவிர வேறு ஒருவருக்கு என் மகளைத் திருமணம் செய்து கொடுத்தால் என் மகளுடைய நோய் குண மாகாதா?'' என்று வருத்தத்துடன் கேட்டாள் தரணி.

''இது சத்தியமான வார்த்தை தாயே. உனக்கு மருமகளுக வரப்போகிறவர் சாதாரணமானவர் என்று நினைக்காதே ! தேவாதி தேவர்களும் போற்றிப் பரவும் பரந்தாமன்—வைகுண்டவாசன்தான் இக்கலி யுகத்தில் வேங்கடேசப்பெருமாளுக அவதரித்திருக்

கிருர். முற்பிறப்பில் வேதவதியாக இருந்த உன் மகளுக்குக் கொடுத்த வாக்குறுதியைக் காக்கவே அவர் திரு அவதாரம் செய்துள்ளார். அவர் வாக் குறுதி நிறைவேறககூடிய தருணம் வந்துவிட்டது. கொஞ்சமும் யோசிக்காமல் உன் மகளை வேங்கட மலையில் குடிகொண்டிருக்கும் வேங்கடேசனுக்கு மண முடித்து நற்புகழ் அடைவாயாக'' என்று கூறிஞள்.

அச்சமயத்தில் மகளைப் பார்ப்பதற்காக அந்தப் புரத்திற்கு வந்த ஆகாசராஜன், "குறத்தி, நீ சொன் னதையெல்லாம் கேட்டுக்கொண்டுதான் இருந்தேன். நீ சொல்வது உண்மையாயிருக்கும் என்றே நம்புகிறேன். ஆனுல், பெணணைப் பெற்றவர்களாகிய நாங்களே எவ் விதம் வலியச் சென்று வேங்கடேசரிடம் எம் பெண்ணைத் திருமணம் செய்து கொள்ளுமாறு கூறு வோம்'' என்ருன் ஆகாசராஜன்.

"மன்னனே, கவலைப்படாதே! இன்னும் கொஞ்ச நேரத்தில் வேங்கடேசனே ஒரு வயதான மூதாட்டியை உன்பால் அனுப்பி வைப்பான். அவள் வந்து கேட்டதும் எவ்விதத் தடையும் சொல்லாமல் ஒப்புக்கொள். இத் திருமணத்திஞல் உன குலம மேன்மையடையும்'' என்ருள் குறத்தி.

பின்னர் குறத்திக்கு நிறையப் பரிசுகள் கொடுத்து அனுப்பி வைத்தான் ஆகாசராஜன்.

சற்று நேரம் கழித்துப் பத்மாவதியின் தோழியர் களுடன் வகுளாதேவி அரண்மனைக்கு வந்தாள். அரசரையும் அரசியையும் வணங்கிவிட்டுத் தான் வந்த காரியத்தைக் கூறிஞள்.

“அரசே, வேங்கடமலையில் குடிகொண்டிருக்கும் வேங்கடேசப் பெருமானுக்குப் பணிவிடை செய்பவள் நான். என் பெயர் வகுளாதேவி. எங்கள் பெருமான் நேற்று வேட்டையாட வந்தபோது தங்கள் மகள் பத்மாவதி தேவியைப் பார்த்து விட்டார். அவளையே திருமணம் செய்துகொள்வது என்ற எண்ணத்துடன் உணவு உறக்கமின்றி வருந்துகிருர். அவருக்கு உங்கள் திருமகளை மணமுடித்துத் தருமாறு கேட்டுக் கொள்ளவே நான் இவ்விடம் வந்தேன்” என்ருள் வகுளாதேவி.

“தாயே, திருமணம் என்பது ஆயிரம் காலத்துப் பயிர். குலம் கோத்திரம் அறிந்து பெண்ணைக் கொடுக்க வேண்டும். என் மகளுக்கும் உங்கள் வேங்கடேசரை மணந்துகொள்ளப் பிரியம் போலிருக்கிறது. அதனுல் தான் நாம் பேசுவதை முகமலர்ச்சியுடன் கேட்டுக் கொண்டிருக்கிருள். என் மகள் விருப்பத்திற்கு மாருக நான் ஒன்றும் செய்யமாட்டேன். ஆயினும் நான் என் மகளை இந்திரலோகத்திற்கு அனுப்பிப் பிரகஸ் பதியை அழைத்துவரச் செய்து அவர் ஆலோசனை யைக் கேட்ட பிறகு உங்கள் வேங்கடேசருக்கு ஓலை அனுப்புகிறேன்” என்ருன் ஆகாசராஜன்.

வகுளாதேவியும் அரச தம்பதியரிடம் விடை பெற்றுக்கொண்டு வேங்கடமலையை அடைந்தாள்.

வகுளாதேவி சென்றதும் ஆகாசராஜன் தன் மகன் வசுதானனை அனுப்பி இந்திரலோகத்தில் உள்ள பிரகஸ்பதியை அழைத்து வருமாறு கூறினுன்.

வசுதானனும் இந்திரலோகம் சென்று பிரகஸ் பதியை நாராயணபுரத்திற்கு அழைத்து வந்தான்.

8136
ஓ1°.38



பிரகஸ்பதி வந்ததும் அவரை எதிர்கொண்டழைத்து அவருக்குச் சகல மரியாதைகளும் செய்வித்து அவரை ஆகாசராஜனும் அவன் மனைவியும் வணங்கினர்.

"ஆகாசராஜனே, திடீரென்று என்னை அழைத்து வரச் சொன்னதன் காரணம் என்ன" என்று ஆகாச ராஜனைப் பார்த்துக் கேட்டார் பிரகஸ்பதி.

"குலகுருவே, வேங்கடமலையில் வாசம் செய்து கொண்டிருக்கும் வேங்கடேசருக்கு என் பெண்ணை மணமுடித்துத் தரச் சொல்லி அங்கிருந்து வயதான மூதாட்டி ஒருத்தி வந்து கேட்டுச் சென்றாள் என் மகள் பத்மாவதிக்கும் வேங்கடேசரை மணம் செய்து கொள்வதில் விருப்பம். மாப்பிள்ளையைப்பற்றித் தங்களிடம் தீர விசாரித்துத் தங்கள் கருத்தை அறிந்து கொள்ளவே தங்களைக் கூப்பிட்டு அனுப்பினேன்" என்றான் ஆகாசராஜன்.

"ஆகாசராஜனே, நான் பூலோகத்திற்கு அடிக்கடி வருபவனல்லன். எனவே எனக்கு வேங்கடமலையைப்பற்றியும் தெரியாது; வேங்கடசரைப்பற்றியும் தெரியாது. தாங்கள் பூலோகத்திலேயே வாசம் செய்யும் சுகமுனிவரிடம் கேட்டால் வேங்கடேசரைப் பற்றிய விவரங்கள் கூறுவார்" என்றார் பிரகஸ்பதி

உடனே ஆகாசராஜனும் தன் தம்பி தொண்டைமானை அழைப்பித்து, "தொண்டைமான், நீ சென்று சுகமுனிவரை அழைத்து வா. அவரிடம் ஆலோசனை கேட்போம்" என்றான்.

தொண்டைமான் நேரே சுகமுனிவரிடம் சென்றான். அவர் கால்களில் விழுந்து வணங்கினான். தன்

கோவிலூர் ஆண்டவர் A. N...

அண்ணண் ஆகாசராஜன் அவரை அழைத்துவருமாறு கூறியதைப் பணிவுடன் கூறினன் தொண்டைமான்.

சுகமுனிவரும் தொண்டைமானின் உரையைக் கேட்டு மகிழ்ந்து அவனுடன் நாராயணபுரம் வந்தார்.

அவரிடம் ஆகாசராஜன், "முனிவர் பிரானே, என் மகள் பத்மாவதியை வேங்கடமலையில் குடி கொண்டிருக்கும் வேங்கடேசனுக்கு மணமுடிக்கக் கருதியுள்ளேன். தாங்கள் வேங்கடேசப் பெருமாளைப் பற்றி நிறைய அறிந்திருப்பீர்கள். எனவே தங்களை அழைத்துக் கேட்ட பிறகு சம்மதம் தெரிவிக்கலா மென்று கருதியுள்ளேன்" என்ருன் ஆகாசராஜன்.

இதைக் கேட்ட சுகமுனிவர், "நல்ல காரியம் செய்தாய். நீ கூறியவாறு உன் மகளை வேங்கடேச ருக்கு மணம் முடித்துக் கொடுத்தால் யாரும் அடை யாத உன்னத நிலையை நீயும் உன் குடும்பத்தினரும் அடைவீர்கள். முன் பிறவியில் நீ செய்த பாக்கியம் தான் உனக்கு வேங்கடேசர் மருமகராகக் கிடைப்பது. வேங்கடேசரைப் போன்ற ஒரு மாப்பிள்ளை இப் பூவுல கம் முழுவதிலும் தேடினும் கிடைக்கமாட்டார். எனவே விரைவில் ஆகவேண்டிய காரியத்தைப் பார்" என்ருர் சுகமுனிவர்.

சுகமுனிவர் சொல்லியதைக் கேட்டு மனம்பூரித்த ஆகாசராஜன் தேவ குருவான பிரகஸ்பதியிடம் பெண் மாப்பிள்ளை ஆகியவர்களின் ஜாதகங்களைப் பார்த்துத் திருமணத்திற்கு நல்ல நாள் குறித்துத் தரச் சொன்னன்.

தேவ குருவான பிரகஸ்பதியும் இருவருடைய ஜாதகங்களையும் பார்த்து நல்ல நாளையும் குறித்துக் கொடுத்தார்.

உடனே ஆகாசராஜன் திருமண ஓலையை எழுதிச் சுகமுனிவரிடம் கொடுத்து அதை வேங்கடேசப் பெருமானிடம் சேர்ப்பித்து விடுமாறு கூறினான்.

சுகமுனிவரும் திருமண ஓலையுடன் ஸ்ரீ வேங்கடேசரைக் காண வேங்கடமலைக்குப் புறப்பட்டுச் சென்றார்.



# 5

நாராயணபுரத்திலிருந்து திருமண ஓலையுடன் கிளம்பிய சுகமுனிவர் வகுளாதேவியையும் அழைத்துக் கொண்டு வேங்கடமலைக்குப் பயணமானார்.

அவர்கள் வேங்கடமலையை அடைந்ததும் வேங்கடேசப்பெருமாள் ஓடோடியும் வந்து வகுளாதேவியை அணைத்துக்கொண்டு, " தாயே, தாங்கள் சென்ற காரியம் காயா பழமா? ஆகாசராஜன் தன் பெண்ணை எனக்கு மணமுடித்துத் தரச் சம்மதித்து விட்டாரா ?", என்று ஒன்றும் அறியாதவர்போல் கேட்டார்.

" வேங்கடரமணா, என் முயற்சியினால் மட்டும் இக் காரியம் பலித்துவிடவில்லை. எனக்கு முன்னேயே ஒரு குறத்தி நாராயணபுரம் சென்று உனக்குப் பத்மாவதியை மணமுடித்துக் கொடுத்தால்தான் அவள் நோய் குணமாகும் என்று குறி சொல்லியிருக்கிறாள். இதில் பத்மாவதிக்கும் பிரியம் இருந்தது. ஆகாசராஜனும் அவன் மனைவியும் மகளின் பிரியத்தை மீறி நடக்காதவர்களாயினர். இச்சமயத்தில் நான் அங்கே செல்லப் பழம் நழுவிப் பாலில் விழுந்ததுபோல் ஆகாசராஜனும் திருமணத்திற்குச் சம்மதித்துவிட்டான். அது மட்டுமன்று. சுகமுனிவரிடம் தன் ஒப்புதலைத் தெரிவித்துத் திருமணத்திற்கு நாளும் குறித்து அனுப்பியிருக்கிறான் " என்றாள் வகுளாதேவி.

வேங்கடேசப்பெருமாள் பாதத்தில் விழுந்து வணங்கித் திருமண ஓலையை அவரிடம் பணிவாகக் கொடுத்தார் சுகமுனிவர்.

சுகமுனிவரிடமிருந்து திருமண ஓலையை வாங்கிப் படித்த வேங்கடேசபபெருமாள் மகிழ்ச்சியடைந்து திருமணத்திற்கு ஒப்புதல் அளித்து ஓர் ஓலையை எழுதிச் சுகமுனிவரிடம் கொடுத்தனுப்பினர்.

சுகமுனிவர் சென்ற பிறகு வகுளாதேவி, "வேங்கடரமணா, உனக்கும் பத்மாவதிக்கும் திருமணம் நிச்சயமாகிவிட்டது. திருமண நேரத்தில் பிள்ளை வீட்டுக்காரர்களாக நான் ஒருத்தி மட்டுமே இருந்தால் இஃது உனக்குப் பெருமையாக இருக்காது. இந்தத் திருமணத்தில் கலந்து கொள்ளுமாறு உன் மகன் பிரமதேவனையும், சிவபிரான் முதலியவர்களையும் தேவகணங்களையும் முனிவர்களையும் வருமாறு அழைப்பு அனுப்பவும். இதனுல் உனக்கும் பெருமை. ஆகாசராஜனுக்கும் உன் பேரில் உள்ள மதிப்பு அதிகமாகும்" என்ருள்.

"அப்படியே ஆகட்டும்" என்று கூறிய வேங்கடேசப்பெருமாள் தம்முடைய வாகனமாகிய கருடனையும் ஆதிசேடனையும் வருமாறு மனத்தால் நினைத்தார்.

அடுத்த கணமே அவர்கள் வேங்கடேசப்பெருமாள் எதிரே வந்து வணங்கினர்கள். வேங்கடேசப்பெருமாள் பிரமனை அழைத்து வருமாறு கருடனை சத்தியலோகத்திற்கு அனுப்பி வைத்தார். ஆதிசேடனை கயிலைமலைக்கு அனுப்பிச் செய்தியைக் கூறி அவர்களை அழைத்து வருமாறு அவர்களுக்கு உத்தரவிட்டார்.

வேங்கடேசப் பெருமாளின் உத்தரவுப்படியே கருடன் சத்தியலோகத்திற்குச் சென்று பிரமனிடம் வேங்கடேசரின் திருமணச் செய்தியைக் கூறினன். இதைக் கேட்ட பிரமதேவர் தம் துணைவி கலைமகளுடனும் மற்ற தேவகணங்களுடனும் வேங்கடமலையை நோக்கிப் பயணமானுர்.

ஆதிசேடன் கயிலைமலைக்குச் சென்று சிவபிரானிடம் வேங்கடேசர் பத்மாவதி திருமணச் செய்தியைக் கூறியதும் அவரும் சிவகணங்கள் தொடரக் கயிலை மலையிலிருந்து வேங்கடமலையை நோக்கிப் பயணமானுர்.

பிரமன், சிவபிரான் முதலியவர்களும், இந்திராதி தேவர்களும், வசிஷ்டர், வால்மீகி, ஜெமதக்னி, கச்சியபர், வாமதேவர், அத்திரி, பரத்துவாசர், விசுவாமித்திரர்களுடனும் மனைவி மக்களுடனும் வேங்கடமலையை நோக்கி வந்துகொண்டிருந்தார்கள்.

தேவகணங்களும் முனிவர்களும் வேங்கடமலைக்குச் சாரி சாரியாக வந்தபடியே இருந்தார்கள். வேங்கடேசரும் வந்தவர்களை அன்புடன் வரவேற்று உபசரித்தார்.

தம் திருமணத்திற்காக வந்தவர்கள் வசதியாகத் தங்கும் பொருட்டுத் தேவேந்திரனுடன் வந்திருந்த தேவதச்சராகிய விசுவகருமாவைக் கூப்பிட்டுப் பல அழகிய அரண்மனைகளைக் கட்டுமாறு உத்தரவிட்டார்.

தேவதச்சராகிய விசுவகருமாவும் வேங்டேசப் பெருமாளின் உத்தரவை சிரமேற்கொண்டு கண் மூடிக் கண் திறக்கும் நேரத்திற்குள் யாவரும் வசதியாகத்

தங்கும் பொருட்டுப் பல அழகிய அரண்மனைகளை உருவாக்கினர்.

இதைத் தவிர நாராயணபுரத்தில் திருமணம் நடைபெறுவதற்காக ஓர் அழகிய கலியாண மண்டபம் ஒன்றையும் கட்டித் தருமாறு விசுவகருமாவுக்கு ஆணையிட்டார் வேங்கடேசப்பெருமாள்.

தேவதச்சராகிய விசுவகருமாவும் நாராயணபுரத்தில் வேங்கடேசர்-பத்மாவதி திருமணம் நடைபெறுவதற்காக ஓர் அழகிய கலியாண மண்டபத்தைக் கட்டினர். அத்துடன் நில்லாமல் நாராயணபுரம் பூராவும அழகிய தோரணங்களையும் கட்டி நாராயணபுரத்தையே கண்ணைக் கவரும்படியான தேவலோகம் போல் அலங்கரிததுவிட்டாா.

வேங்கடேசப்பெருமாள் தம் திருமணத்திற்கு வந்த எல்லாரிடமும் தம் திருமணத்தைச் சிறப்பித்துத் தரவேண்டும் என்று கேட்டுக்கொண்டார். வசிஷ்டரைப் பார்த்து, ''நீங்கள்தான் புரோகிதராக இருந்து எங்கள் திருமணத்தை நடத்தித் தரவேண்டும்'' என்று கேட்டுக்கொண்டார்.

'' தேவர்களையும் முனிவர்களையும் நீங்கள் கவனித்துக்கொள்ள வேண்டும் '' என்று சிவபெருமானிடம் கேட்டுக்கொண்டார்.

முருகக் கடவுளை நோக்கி, '' தேவர்களை வேங்கடமலையிலிருந்து நாராயணபுரம் அழைத்துவரும் பொறுப்பை ஏற்றுக்கொள்க '' என்று கூறினர்.

வந்தவர்களுக்கு உணவு தயாரிக்கும் பணியை அக்கினிதேவனுக்கு வழங்கினர்.

வந்தவர்களுக்குத் தாம்பூலம் சந்தனம் புதிய துணிமணிகள் ஆபரணம் முதலியவை கொடுக்குமாறு குபேரனுக்குக் கட்டளையிட்டார்.

இவ்வாறு ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு வேலை சொல்லிவிட்டுத் தம் இருப்பிடம் சென்று வேங்கடேசப் பெருமாள இலட்சுமிதேவியை நினைத்துக்கொண்டார்.

'என்னுடன் இணைபிரியாமல் இருந்த இலட்சுமி தேவி எனக்கும் பத்மாவதிக்கும் திருமணம் நடைபெறப் போகிற இச் சமயத்தில் இல்லாமல் போய்விட்டாளே!' என்று வருந்தினர்.

தந்தையார் வருத்தத்துடன் இருப்பதை அறிந்த பிரமதேவன், "தந்தையே, மகிழ்ச்சிகரமான இச்சமயத் தில் தாங்கள் கவலைப்படக் காரணம் என்ன?" என்று கேட்டார்.

"மகனே, என் திருமணத்திற்கு இவ்வளவு பேர் வந்து பயன் என்ன? உன் தாயார் இலட்சுமிதேவி இல்லையே. இக் குறை என் மனத்தை வாட்டுகிறது" என்றார்.

"அப்படியானல் யாரையாவது அனுப்பிக் கொல்லாபுரத்திலிருக்கும் என் தாயாரை அழைத்து வரலாமே!" என்றார் பிரமதேவர்.

"ஆம், மகனே! அப்படித்தான் செய்யவேண்டும். நீ போய் சூரியதேவனை இவ்விடம் அழைத்து வா! நான் சொல்லி யனுப்புகிறேன்" என்றார் வேங்கடேசப் பெருமாள்.

பிரமதேவன் சற்று நேரத்திற்கெல்லாம் சூரிய பக வானை அழைத்துக்கொண்டு தம் தந்தையார் எதிரில் வந்து நின்றார்.

" சூரியனே, நீ நேரே கொல்லாபுரம் சென்று நான் நோய்வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாக இருப்ப தாகக் கூறி இலட்சுமி தேவியை இங்கு அழைத்து வா. ஏற்கனவே என்பேரில் கோபம்கொண்டுள்ள இலட்சுமி தேவிக்கும் எனக்குத் திருமணம் எனற செய்தி தெரிந் தால் மேலும் என்பேரில் அதிகக் கோபப்படுவாள். என் திருமணச் செய்தியை மறந்தும்கூட அங்கே சொல்லி விடாதே! நான் சொல்லியவாறு கூறி இலட்சுமி தேவியை இவ்விடம் அழைத்து வா" என்றார் வேங்கடேசப்பெருமாள்.

சூரிய பகவான் கொல்லாபுரம் சென்றார். இலட்சுமி தேவியைக் கண்டு வணங்கி, " தாயே, உலகநாயகரான மகாவிஷ்ணுவானவர் படுத்த படுக் கையாக இருக்கிறார். அவருக்குப் பணிவிடை செய்ய ஒருவரும் இல்லை தங்களைக் கையுடன் அழைத்து வருமாறு கூறினார்கள் " என்றார்.

மகாவிஷ்ணுவுக்கு உடல்நிலை சரியில்லை யென்று கேட்டதும் மகாலட்சுமியின் உடலும் உள்ளமும் பதறலாயின. உடனே கொல்லாபுரத்தை விட்டுச் சூரிய பகவான் வழிகாட்ட வேங்கடமலைக்கு வந்தார்.

வேங்கடமலையில் தேவாகளும் முனிவர்களும் குழுமியிருக்கக் கண்டு, 'ஒருவேளை நமது பிரபுவின் உடல் நிலையைக் கண்டு போகத்தான் இவர்கள் வந்திருக்கிறார்களோ ?' என்று ஐயப்பட்டாள்.

இலட்சுமிதேவி வேங்கடமலைக்கு வந்துவிட்டார் என்பதை அறிந்ததும் வேங்கடேசப் பெருமாள் நோயாளி போல் நடந்து வந்தார்; பிரமன் ஒருபுறமும், சிவபிரான் ஒருபுறமும் தோள் கொடுத்துத் தாங்க, வேங்கடேசர் நோயாளிபோல் இலட்சுமிதேவியின் முன்னால் வந்தார்.

அவரைக் கண்டதும், "பிரபோ, தங்களை இந்த நிலையிலா காணவேண்டும்? தங்களைப் பிரிந்த காரண மாகத்தான் தங்களுக்கு இவ்வாறு ஏற்பட்டது. இப் பாபத்தை எங்குச் சென்று போக்கிக் கொள்வேன்?" என்று வாய்விட்டு அழுதார் இலட்சுமிதேவி.

உடனே வேங்கடேசப்பெருமாள் துள்ளி யெழுந்து இலட்சுமிதேவியின் அருகே சென்றார்.

இதனைக் கண்ட இலட்சுமிதேவி வெகுண் டெழுந்து, "இஃது என்ன விளையாட்டு? இத்தனைநேரம் நோயாளி போல் நடித்தீர்களே; இஃது எதற்காக?" என்று கோபத்துடன் கேட்டார்.

"இலட்சுமி, கோபப்படாதே! இராமவதாரத்தில் நீ சீதையாக இருந்தபோது உனக்காக இராவணனிடம் சிறைப்பட்டுச் சென்ற வேதவதியை எனக்கு மண முடிக்க எண்ணினாய். நான் அப்பொழுது இராமவதாரத்தில் நான் ஒரே பத்தினியை உடையவனா யிருப்பேன். எனவே இவளை மணந்துகொள்ள இயலாது. கலியுகத்தில் வேதவதி என்பவள் ஆகாச ராஜனின் மகளாகப் பிறந்து இருக்கும்போது நான் வேங்கடேசராக அவதரித்து அவளை மணந்துகொள் வேன் என்று உன்னிடம் கூறினேன் அன்றோ? அதற்

குரிய நேரம் வந்துவிட்டது. எல்லாப் பந்து ஜனங்களும் வந்துவிட்டார்கள். நீ ஒருத்தி இல்லாததுதான் குறையாக இருந்தது. நீயும் இருந்து திருமணத்தை நடத்தித் தரவேண்டு மென்பதற்காகத்தான் இவ்விதம் நாடகமாடினேன். வேறொன்றும் இல்லை'' என்றார் வேங்கடேசப்பெருமாள்.

இலட்சுமிதேவி இறைவனின் திருவிளையாடலை எண்ணிப் புன்முறுவலுற்றுத் தானும் உடனிருந்து திருமண வேலைகளை முன்னின்று கவனித்துக் கொண்டார்.

இலட்சுமிதேவி வேங்கடேசப்பெருமாளை நறுமணம் கமழும் நீரில் நீராட்டினர். பிறகு புத்தாடைகள் உடுத்தினர். விலையுயர்ந்த ஆபரணங்களை அவருக்குத் தேவி பூட்டினர் ; நெற்றிக்குத் திலகமிட்டார்.

வேங்கடேசப்பெருமாள் பெண் வீட்டிற்குச் செல்வதற்காகத் தயாராகிக் கொண்டிருந்தார். அந்நேரத்தில் திருமணத்திற்காக வந்த தேவர்களும் முனிவர்களும் குளித்து முழுகிவிட்டு ஜபதபங்களை முடித்துவிட்டு ஓய்வாக இருந்தனர்

இச் சமயத்தில் வேங்கடேசப்பெருமாள் பிரமதேவனை நோக்கி, ''அனைவரையும் விரைவில் புறப்படச் சொல். இப்பொழுது புறப்பட்டால்தான் இருட்டுவதற்குள் நாராயணபுரம் செல்லமுடியும். அனைவரையும் கிளம்பச் சொல்'' என்றார்.

''தந்தையே, நம் திருமணத்திற்காக வந்த விருந்தினர் அனைவரும் காலைக்கடன்களை முடித்துவிட்டு வெறும் வயிற்றுடன் இருக்கின்றனர். இந் நிலையில் அவர்களைப் புறப்படச் சொல்லுவது அழகன்று. நம்

வீடு தேடிவந்த விருந்தினர்களுக்கு உணவிட்ட பிறகு அவர்களைப் புறப்படச் சொல்லவேண்டும்" என்றா பிரமதேவன்.

"மகனே, கொஞ்சம்கூட விவரம் தெரியாமல் பேசுகிறாயே! இவ்வளவு பேருக்கும் உணவிடப் பணத்துக்கு நான் எங்கு போவேன்? இருக்கிற நிலை தெரியாமல் வெறும் பேச்சுப் பேசுவதில் என்ன இலாபம்"" என்றார் வேங்கடேசப்பெருமாள்.

உடனே சிவபெருமான் குறுக்கிட்டுப் "பரந்தாமா, இம்மாதிரிக் காரியங்களுக்குப் போதுமான பொருள் கைவசமில்லாமல் இறங்கக் கூடாது. அப்படியே இறங்கிவிட்டாலும் யாராவது தெரிந்தவர் அறிந்தவர்களிடம் கடன் வாங்கியாவது எடுத்த காரியத்தை இனிதாக நிறைவேற்ற வேண்டும்" என்று கூறினார்.

"சரி' அப்படியானால் தாங்கள்தான் இச் சமயத்தில் கடனாகப் பொருள் கொடுத்து உதவுங்களேன்" என்று சிவபெருமானைப் பார்த்துக் கேட்டார் வேங்கடேசப்பெருமாள்.

"நான்தான் பிச்சைக்காரனாயிற்றே! என்னிடம் பொருள் ஏது?" என்று கையை விரித்தார் சிவபெருமான்.

"சரி, என்று கூறிய வேங்கடேசப்பெருமாள் குபேரனை உடனே அழைத்து வருமாறு பிரமதேவரிடம் கூறினார். பிரமதேவனும் குபேரனை அவ்விடத்திற்கு அழைத்து வந்தார்.

''அழகாபுரி அதிபனே, இப்பொழுது என் திரு மணச் செலவுக்குப் பொருள் தேவைப்படுகிறது. நீதான் கொடுத்து உதவுதல் வேண்டும்'' என்று வேங்கடேசப்பெருமாள் குபேரனை நோக்கிக் கேட்டார்'

''பிரபோ, எனக்கு என்று பொருள் ஏது? எல்லாம் தங்கள் பொருள்தானே! அதைக் காவல் காப்பவன் தானே நான். தாங்களா என்னிடம் கடன் கேட்பது?'' என்று பணிவுடன் கூறினன் குபேரன்.

''குபேரா, உன்னிடம் இருப்பது நமது பொருளே ஆயினும் அதனை நாம் பெறக்கூடாது. வைகுண்டத் தில் உள்ள பொருளைப் பூவுலகத்திற்குக் கொண்டு வரமாட்டேன். அதைப்போல் பூலோகத்தில் உள்ள பொருளை வைகுண்டத்திற்கு எடுத்துச் செல்லவும் மாட்டேன். அதைத் தவிர உன்னிடம் கடன் வாங்கு வதும் ஒரு காரணத்திற்காகத்தான். எனவே என் திருமணச் செலவுக்கு ஏற்படக்கூடிய தொகையைக் கொடுத்து உதவு'' என்ருர் வேங்கடேசப்பெருமாள்.

"பிரபோ, கடன் கொடுப்போருக்குக் கடன் வாங்குபவர் கடன் பத்திரம் எழுதிக் கொடுக்கவேண் டும். அதைப்போல் தாங்களும் கடன் பத்திரம் எழுதிக் கொடுத்தால் தாங்கள் வேண்டும் தொகையைக் கொடுப்பேன்'' என்ருன் குபேரன்.

உடனே வேங்கடேசர் குபேரனுக்குக் கடன் பத்தி ரம் எழுதிக் கொடுத்துப் பதினன்கு இலட்சம் இராமர் முத்திரையிட்ட தங்கக் காசுகளைக் கடனகப் பெற்றுக் கொண்டார். இதற்கு மாதமொன்றுக்கு நூற்றுக்கு ஓர் இராமர் முத்திரையிட்ட தங்க நாணயம் வட்டியாகக் கொடுப்பதாகவும் கடன் பத்திரம் எழுதிக்கொடுத்தார்.

பிரமதேவனும் சிவபெருமானும் பத்திரத்தில் சாட்சிக் கையொப்பமிட்டனர்.

அதன் பிறகு குபேரன் பதினுன்கு இலட்சம் இராமர் முத்திரையிட்ட தங்க நாணயங்களை வேங்கடேசப்பெருமாளுக்குக் கடனுகக் கொடுக்க, அவர் அதை வைத்துக்கொண்டு வந்த விருந்தினர்களுக்கு விருந்து படைக்க உத்தரவிட்டார்.



# 6

மறுநாள் காலை வேங்கடேசப்பெருமாள் கருடனை யழைத்து அனைவரையும் நாராயணபுரம் செல்வதற்குச் சித்தம் செய்யுமாறு பிரமதேவரிடம் கூறி யனுப்பினார். பிரமதேவரும் அனைவரையும் துரிதப்படுத்தி நாராயணபுரம் செல்வதற்கு வேண்டிய ஏற்பாடுகளைக் கவனிக்கலானார்.

வேங்கடேசப்பெருமாள் கருடன்மீது அமர்ந்தார். சிவபிரான் காளையின்மீது அமர்ந்தார். மயில்மீது முருகப்பெருமான் அமர்ந்தார்.

முன்னே பிரமதேவர் செல்ல வலப்புறத்தில் சிவபிரானும் இடப்புறம் வாயுதேவனும் சென்றனர் முருகக்கடவுள் பின்னால் வந்தார். இலட்சுமி தேவியும் வகுளாதேவியும் பொன் தேர்களில் ஏறிக்கொண்டனர் இந்திராதி தேவர்களும் முனிவர்களும் வரிசை வரிசையாக நாராயணபுரத்தை நோக்கிச் சென்றனர்.

மலை இறங்கி நாராயணபுரத்தை நோக்கிச்சென்று கொண்டிருந்த வேங்கடேசரும் மற்றவர்களும் வழியில் திருச்சானூர் கிராமத்தைக் கண்டனர். வழிநடந்து வந்த களைப்பால் அனைவரும் அங்கு இளைப்பாறக் கருதினர்.

திருச்சானூரில் தங்கியிருந்த சுகமுனிவர் வேங்கடேசப்பெருமாள் முதலியவர்களைத் தம் வீட்டில் தங்கி இளைப்பாறிவிட்டுச் செல்லுமாறு கூறினார்.

வேங்கடட்பெருமாள், இலட்சுமிதேவி, வகுளாதேவி முதலியோர் சுகமுனிவரின் ஆசிரமத்தில் தங்கியிருந்தனர். சுகமுனிவர் வேங்கடப்பெருமாளுக்கும் அவருடன் வந்துள்ள இலட்சுமிதேவி வகுளாதேவி முதலியோருக்கும் அமுது படைக்க விரும்பினார். அதற்காகக் குளத்தில் நீராடிவிட்டு வந்து தம் கையாலேயே உணவு சமைத்தார். சமைத்த உணவைத் தம் கையாலேயே வேங்கடேசப்பெருமாள், இலட்சுமிதேவி· வகுளாதேவி முதலியோருக்கு இட்டுத் தாமும் உண்டார்.

வேங்கடேசபபெருமாளுடன் வந்த முனிபுங்கவர்களும் மற்றவர்களும் குளித்து நீராடிவிட்டுச் சுகமுனிவரின் ஆசிரமத்திற்கு வந்தனர். அங்கு அவர் வேங்கடேசர், இலட்சுமிதேவி, வகுளாதேவி முதலியோருக்கு மட்டும் உணவு இட்டதை அறிந்து கடுங்கோபம் கொண்டனர். தங்களை விட்டுவிட்டுத் தங்களுடன் வந்த மூவருக்குமட்டும் அவர் அன்னம் இட்டது அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்களுக்கோ கடும் பசி! பசியினால் வந்த முனிவர்கள் சுகமுனிவரைச் சபிக்க நினைத்தனர். அவர்கள் எண்ணத்தைப் புரிந்துகொண்ட வேங்கடேசர் தம் வயிற்றைத் தடவிக்கொண்டு, "ஏவ்" என்று நீண்டதொரு ஏப்பம் விட்டார்.

அடுத்தகணம் பசியுடன் வந்த முனிவர்கள் வயிறு பூராவும் அறுசுவை உணவு சாப்பிட்டு நிரம்பியதைப் போல் ஆகிவிட்டது. பசி போனபின் அவர்களுடைய

கோபமும் பறந்துவிட்டது. சுகமுனிவரை அவர்கள் வாழ்த்தித் தங்கள இருப்பிடங்களுக்குச் சென்றனர்.

அன்று இரவு பூராவும் அங்குத் தங்கியிருந்து மறு நாள் காலையில் மீண்டும் அனைவரும் நாராயணபுரம் நோக்கிச் சென்றனர்.

திருமணக் கூட்டம் நாராயணபுரத்தை நோக்கி வரும்போதே மக்கள் கூட்டமும் அவர்களுடன் சேர்ந்து கொண்டது.

வேங்கடேசப்பெருமாள் நாராயணபுரம் எல்லையை அடைந்தார் ஆகாசராஜன் தன் மனைவி தரணிதேவி, மகன் வசுதானன், தம்பி தொண்டைமான், குலகுரு பிரகஸ்பதி முதலியோர் புடைசூழப் பத்மாவதி தேவியை அழைத்துக்கொண்டு வேங்கடேசரை வரவேற்ருன். தேவேந்திரன் முன்வந்து வேங்கடேசப் பெருமாளை ஆகாசராஜனுக்கு அறிமுகம் செய்து வைத்தான்.

" இவர் என் மருமகப்பிள்ளையாக வர நான் பெரும் பேறு பெற்றேன் " என்று ஆனந்தம்மேலிடக் கூறினன் ஆகாசராஜன். பக்கத்திலிருந்த நாரதமுனிவர் ஆகாச ராஜனை வேங்கடேசப் பெருமாளுக்கு அறிமுகம் செய்துவைத்தார். பின்னர் பத்மாவதி தேவி அழகிய யானை ஒன்றின்மீதும், வேங்கடேசப்பெருமாள் கருடன் மீதும் அமர்ந்து நகர்வலம் வந்தனர். மக்கள் கூட்டம் போகும் வழியெல்லாம் மலர்சொரிந்து வாழ்த்தி அவர்களை வரவேற்றது.

ஊர்வலம் நாராயணபுரத்தை அடைந்ததும் ஆகாசராஜன் பிள்ளை வீட்டார் தங்கும் இடத்திற்கு

வேங்கடேசப்பெருமாளையும் அவருடன் வந்தவர்களை யும் அழைத்துச் சென்றார். தம்முடன் வந்த தம்பி தொண்டைமானைப் பார்த்து, "தம்பி, இவர்களுக்கு ஒரு குறையும் நேராதவாறு உபசரிக்கும் பொறுப்பு உன்னுடையது. நீ இங்கிருந்து இவர்களுக்கு வேண்டி யதைக் கொடுத்துக் கவனித்துக்கொள்" என்றான்.

தொண்டைமானும் வேங்கடேசப்பெருமாளுடன் வந்தவர்களுக்கெல்லாம் அறுசுவை உணவு படைத்துச் சந்தன தாம்பூலங்கள் கொடுத்தான்.

அனைவரும் உண்டு களித்துச் சுகமாக உறங்கினர். பொழுது விடிந்ததும் அனைவரும் எழுந்து காலைக் கடன்களை முடித்தனர். ஆகாசராஜனின் தம்பி தொண்டைமான அனைவருக்கும் ஒரு குறையும் நேராத வண்ணம் கவனித்துக்கொண்டான்.

அன்று மாலை வேங்கடேசப்பெருமாளைப் பெண் வீட்டார் திருமண மண்டபத்திற்கு அழைத்துச்சென்ற னர். வேங்கடேசப்பெருமாள் முப்பத்து முக்கோடி தேவர்களும் முனிவர்களும் புடைசூழத் திருமண மண்டபத்தை அடைந்தார்.

வேங்கடேசப்பெருமாள் திருமண மண்டபத்தை அடைந்ததும் ஆகாசராஜனும் அவன் மனைவியும் தம் மகள் பத்மாவதி தேவியை அழைத்துக்கொண்டு திருமண மண்டபத்திற்கு வந்தனர். அச் சமயத்தில் பேரி, துந்துபி முதலிய வாத்தியங்கள் முழங்கின. தேவர் களின் வாழ்த்தொலியும் முனிவர்களின் ஆசி மொழி களும் விண்ணைப் பிளந்தன.

நல்ல நேரத்தில் குலகுரு பிரகஸ்பதி தேவரும் வசிஷ்ட முனிவரும் ஆசி கூற ஆகாசராஜன் பொற்

குடத்திலிருந்து நீர் வார்த்துப் பத்மாவதி தேவியை வேங்கடேசப் பெருமாளுக்குக் கன்னிகாதானம் செய்து கொடுத்தான்.

திருமணத்திற்கு வந்திருந்தவர்கள் எல்லாரும் மலர் சொரிந்து பத்மாவதியையும் வேங்கடேசப்பெருமாளையும் வாழ்த்தினர்.

திருமணம் முடிந்தபின் சில நாட்கள் ஆகாசராஜன் வீட்டில் தங்கியிருந்த வேங்கடேசப்பெருமாள் தாம் வேங்கடமலைக்குச் செல்லவேண்டும் என்று ஆகாசராஜனிடம் அனுமதி கேட்டார்.

"இதற்குள்ளாகவா செல்லப்போகிறீர்கள்? இன்னும் சிறிது காலம் எங்களுடன் தங்கியிருந்தால் எங்களுக்கு மகிழ்ச்சியாக இருக்கும்" என்றான் ஆகாசராஜன்.

"இப்பொழுது அவசர வேலையுள்ளது. எனவே வேங்கடமலைக்கு உடனே சென்றாகவேண்டும்" என்றார் வேங்கடேசப்பெருமாள்.

ஆகாசராஜனும், வசுதானன், தொண்டைமான் முதலியோரும் வேங்கடமலைப்பெருமாளைச் சிறிது காலம் தங்கி யிருக்குமாறு எவ்வளவோ வேண்டிக் கொண்டனர்.

"பிறிதொரு சமயம் பார்ப்போம். இப்பொழுது அவசரமாகச் செல்லவேண்டும். பிரயாணத்திற்கு வேண்டிய ஏற்பாடுகளைச் செய்யுங்கள்" என்றார் வேங்கடேசப்பெருமாள்.

ஆகாசராஜன் குடும்பத்தினர் அவரையும் பத்மாவதி தேவியையும் பிரிய மனமில்லாமல் விடை கொடுத்தனர்.

ஆகாசராஜன் வேங்கடேசப்பெருமாளுடன் செல்லும் தன் மகள பத்மாவதி தேவிக்குக் கணக்கிலடங்காத வெகுமதிகளைச் சீர்வரிசையாகக் கொடுத்தான். வேங்கடேசப்பெருமாளுடன் வெகுதூரம் வந்தான். வேங்கடேசப்பெருமாள் ஆகாசராஜனைப் பார்த்து, " எங்கள் பொருட்டுத் தாங்கள் வெகுதூரம் வந்துவிட்டீர்கள். இனி நீங்கள் திரும்பிச் செல்லலாம். உங்கள் மகளுக்கு ஒரு குறையும் நேராதவண்ணம் கண்ணின் கருமணிகளைப் போல் பாதுகாப்பேன். தாங்கள் கவலையின்றித் திரும்பிச் செல்லலாம் " என்று கூறினர்.

ஆகாசராஜன் தம் மகளிடமும் மருமகனிடமும் பிரியாவிடை பெற்று நாராயணபுரம் சேர்ந்தான்.

வேங்கடேசப்பெருமாளும் அவரது பரிவாரத்தினரும் வேங்கடமலையை அடைவதற்கு முன்னல் வழியிலுள்ள சுவர்ணமுகி நதிக் கரையில் தங்கி இளைப்பாறினர். அங்கு அகஸ்தியருடைய ஆசிரமம் இருந்தது. அவர் வேங்கடேசப்பெருமாளை நோக்கி, " பெருமானே, திருமணமாகி ஆறு மாதங்கள் வரை புதுமணத்தம்பதிகள் மலையேறுதல் கூடாது. எனவே தாங்களும் பத்மாவதி தேவியும் என் ஆசிரமத்தில் அதுவரை தங்கியிருக்க வேண்டுகிறேன் " என்றார்.

வேங்கடேசப்பெருமாளும் " அவ்வாறே ஆகட்டும் " என்று கூறினர்.

பின்னர் வேங்கடேசப்பெருமாளின் திருமணத்திற்காக வந்திருந்த தேவர்களும் முனிபுங்கவர்களும் ஒவ்வொருவராக வந்து வேங்கடேசப்பெருமாளுடன் விடை பெற்றுக்கொண்டு தத்தம் இருப்பிடங்களுக்குச்

சென்றனர். முடிவில் இலட்சுமி தேவியும், " பிரபோ, நானும் கொல்லாபுரம் செல்கிறேன். தாங்கள் பத்மா வதி தேவியுடன் வேங்கடமலையில் சுகமாக இருங்கள். தாங்கள் வைகுண்டத்திற்கு வரும்போது நானும் அவ் விடம் வந்துவிடுகிறேன் " என்று கூறி விடை பெற்றுக் கொல்லாபுரம் சென்றார்.

தம்முடன் வந்த அனைவரும் சென்ற பிறகு பத்மா வதி தேவியும் வேங்கடேசப்பெருமாளும் அகஸ்திய ருடைய ஆசிரமத்தில் இனிதாகக் காலம் கழித்து வந்தனர்.

அப்பொழுது ஒரு நாள் நாராயணபுரத்திலிருந்து தூதன் ஒருவன் வந்து வேங்கடேசப்பெருமாளின் திருவடிகளில் வீழ்ந்து வணங்கினான்.

" பிரபோ, எமது மன்னர் ஆகாசராஜன் நோய் வாய்ப்பட்டுப் படுத்த படுக்கையாக இருக்கிறார். தங்களையும் பத்மாவதி தேவியாரையும் உடனே அழைத்து வருமாறு கூறினார்" என்றான்.

இச் செய்தி கேட்ட பத்மாவதி தேவியின் உடல் பதைத்தது. தன் தந்தையை உடனே பார்க்கவேண்டு மென்று துடித்தார். வேங்கடேசப்பெருமாளும் பத்மா வதி தேவியின் மன நிலையை அறிந்துகொண்டு அகஸ்திய முனிவரிடம் விடை பெற்று உடனே நாரா யணபுரத்தை நோக்கிப் பயணமானார்.

வேங்கடேசப்பெருமாளும் பத்மாவதி தேவியும் அரண்மனையை அடைந்தனர். மன்னன் ஆகாசராஜன் படுத்த படுக்கையாக இருந்தனர். மகளையும் மருமகனை யும் பார்த்துக் கண்ணீர் விட்டான். தன் பக்கத்தி லிருந்த தன் மகன் வசுதானனையும் தன் தம்பி

தொண்டைமானையும் அழைத்தான். அவர்கள் கைகளைப் பிடித்து வேங்கடேசப்பெருமாளிடம் கொடுத்தான்.

"பிரபோ, என் மகன் வசுதானனையும் என் தம்பி தொண்டைமானையும் என் கண்களைப்போல் காப்பாற்றி வந்தேன். எனக்குப் பிறகு நீங்களதான் இவர்களுக்கு ஒரு குறையும் நேராதவாறு காப்பாற்றவேண்டும்" என்றான்

வேங்கடேசப்பெருமாளும் அவ்வாறே செய்வதாக வாக்களித்தார்.

அதற்குப் பிறகு வெகுநேரம் வரை ஆகாசராஜன் உயிர் தரித்திருக்கவில்லை. ஆகாசராஜன் இறந்து விட்டான். வேங்கடேசப்பெருமாள் ஆகாசராஜனைத் தம் திருவருளால் மோட்ச உலகிற்கு அனுப்பி வைத்தார்.

ஆகாசராஜனின் ஈமச் சடங்குகள் முடிந்த பிறகு வேங்கடேசப்பெருமாளும் பத்மாவதி தேவியும் வசுதானனிடமும், தொண்டைமானிடமும் விடை பெற்றுக்கொண்டு அகஸ்தியர் ஆசிரமத்திற்குச் சென்றனர்.

அவர்கள் புறப்பட்டுவந்து ஒருமாதம்கூட ஆகியிருக்காது. அதற்குள் வசுதானனும் தொண்டைமானும் அரசாட்சிக்காகப் போரிட்டுக் கொண்டனர். இருவரும் வேங்கடேசப்பெருமாளிடம் தமக்கு உதவி புரியுமாறு வேண்டிக்கொண்டனர்.

இறைவன் தம் சங்கு சக்கரங்களைத் தொண்டைமானுக்குக் கொடுத்து அனுப்பினார்.

''தகப்பன் இல்லாத என் தம்பி வசுதானனைக் காப்பாற்றுங்கள்'' என்று வேங்கடேசப்பெருமாளிடம் முறையிட்டார் பத்மாவதிதேவி.

''நானே உன் தம்பிக்குப் போரில் உதவி செய்வேன்'' என்று கூறிய வேங்கடேசப்பெருமாள் வசுதானனுக்கு உதவியாகப் போர்க்களத்திற்குச் சென்றார்.

போர்க்களத்தில் தொண்டைமானின் மகன் வேங்கடேசப்பெருமாள்மீது அவர் கொடுத்த சக்கராயுதத்தையே பிரயோகித்து விட்டான். சக்கராயுதத்திற்குத் தன் எதிரே இருப்பவர் இன்னார் என்று தெரியாது. அது தன் வேலையைச் செய்துவிட்டது. வேங்கடேசப்பெருமாள மூர்ச்சையுற்று விழுந்துவிட்டார். இச் செய்தி கேட்ட பத்மாவதிதேவி அகஸ்தியருடைய துணையுடன் போர்க்களத்திற்கு ஓடோடியும் வந்தார். வேங்கடேசப்பெருமாளுக்குப் பணி விடைகள் செய்து அவருடைய மூர்ச்சையைத் தெளிய வைத்தார்

கண்விழித்துப் பார்த்த வேங்கடேசப்பெருமாள் பத்மாவதி தேவியைக் கடிந்துகொண்டு, 'போர்க் களத்திற்குப் பெண்கள் வரலாமா? முனிவரே நீராவது இவளைத் தடுத்திருக்கக்கூடாதா?'' என்று அகஸ்திய முனிவரிடம் கேட்டார்.

''பிரபோ, வசுதானனுக்கும் தொண்டைமானுக்கும் போர் தொடங்கியதுமே பத்மாவதி பட்ட கவலை இவ்வளவு அவ்வளவு அன்று. ஒருபுறம் தம்பி, மற்றொருபுறம் சிற்றப்பன். இரண்டும் பேரும் போர்க்களத்தில் அடித்துக்கொள்வது அவருக்குப் பிடிக்கவில்லை

அவர்கள் இருவரையும் சமாதானம் செய்து வைக்கும் படி வேண்டவே என்னுடைய துணையுடன் போர்க்களத்திற்கு வந்தார் வழியில் நீங்கள் மூர்ச்சையுற்று விழுந்த செய்தி கேட்டதும் தேவியார் பதறிப் போய்விட்டார்'' என்றார் அகஸ்திய முனிவர்.

''பிரபோ, அரசுரிமைக்காக இருவரும் போரிட்டுக் கொள்வது விவேகமன்று. இருவருமே அரசாளத் தகுதி படைத்தவர்கள் இருவருக்கும் தாங்களே நாட்டையும் செல்வத்தையும் பகிர்ந்தளித்து அவர்களைச் சமாதானம் செய்து வையுங்கள்'' என்று பத்மாவதி தேவி வேங்கடேசப்பெருமாளை வேண்டிக்கொண்டார்.

வேங்கடேசப்பெருமாளும் அவ்வாறே இருவருக்கும் நாட்டையும் செல்வத்தையும் பகிர்ந்து கொடுத்து அவர்களை ஒன்றுபடுத்தி வைத்தார்.

அதன் பின்னர், ''சமாதானம் செய்ததற்குக் காணிக்கையாக நீங்கள் இருவரும் எங்களுக்குக் காணிக்கை தரவேண்டும்'' என்று வசுதானனையும் தொண்டைமானையும் பார்த்துக் கேட்டார் வேங்கடேசப் பெருமாள்.

வசுதானன் முப்பத்தாறு கிராமங்களை வேங்கடேசப்பெருமாளுக்குக் காணிக்கையாகக் கொடுத்தான்.

''தொண்டைமானே, உனது அண்ணன் தனது செல்வப் புதல்வியை எனக்களித்துக் கீர்த்தி பெற்றான். எனக்கோ நிற்க நிழல் இல்லை. வேங்கடமலையில் நானும் பத்மாவதிதேவியும் தங்குவதற்காக எங்களுக்கு

ஒரு கோவில் கட்டுக'' என்று தொண்டைமானிடம் கேட்டுக்கொண்டார் வேங்கடேசப்பெருமாள்.

தொண்டைமானும் வராகப்பெருமானிடம அனுமதி பெற்று வேங்கடாசலபதிக்காக அற்புதமான கோயில் ஒன்றை வேங்கடமலையில் கட்டுவிததான். பக்கத்தில் அழகிய குளம் ஒன்றை வெட்டுவித்தான். பக்தர்கள் எளிதில் மலைமேல் சென்றுவர அழகிய படிகட்டுக்களைக் கட்டுவித்தான்.

கோயில் வேலையெல்லாம் முடிந்ததும் வேங்கடேசப்பெருமாள் பத்மாவதி தேவியைத் தமது திருமார்பில் வைத்துக்கொண்டு வேங்கடமலையில் கோயில் கொண்டருளினார்.



# 7

வேங்கடேசப்பெருமாளுக்குத் திருக்கோயில் கட்டு வித்த தொண்டைமான் தனது அரண்மனையிலிருந்து நாள்தோறும் வேங்கடமலைக்கு வந்து வேங்கடேசப் பெருமாளைத் தரிசித்துச் சென்று கொண்டிருந்தான்.

ஒருநாள் அரசன் தொண்டைமான் அரசவையில் வீற்றிருக்கும்போது ஏழைப் பிராமணர் ஒருவர் தமது ஐந்து வயது மகனுடனும், கர்ப்பவதியாகிய தன் மனைவி யுடனும் வந்தார்.

அவரைக் கண்டதும் தொண்டைமான் அவரை அன்புடன் வரவேற்று இருக்கை அளித்து, அவர் வந்த காரணம் என்னவென்று கேட்டான்.

"அரசே, என் பெயர் கூர்மன் என்பது. எனது தந்தையார் சில மாதங்களுக்கு முன் இறந்து விட்டார். அவருடைய எலும்புகளைக் கங்கை நதியில் கரைக்க காசிக்குச் செல்ல விரும்புகிறேன், கர்ப்பவதி யான என் மனைவியையும் அறியாப் பாலகனான என் மகனையும் என்னுடன் அழைத்துச் செல்ல விரும்ப வில்லை. இவர்களைப் பாதுகாப்பாக வைத்திருந்து நான் வந்தபிறகு ஒப்படைக்க வேண்டுகிறேன்" என்று வேண்டிக்கொண்டார் கூர்மன்.

" அப்படியே செய்கிறேன். நீ சுகமாகக் காசி யாத்திரை சென்று வா " என்று கூறிய தொண்டைமான் ஏழைப் பிராமணரின் வழிச் செலவுக்குப் பொருள் கொடுத்து அவரை அனுப்பிவைத்தான்.

பின்னர் பிராமணருடைய மனேவியும் மகனும் சுகமாக வசிப்பதற்காக ஒரு வீடு கட்டினுன். அதில் ஆறு மாத காலத்திற்கு வேண்டிய உணவுப் பொருள் வகைகளை வைத்தான். அந்த வீடு தீயவர் கண்களில் படக்கூடாது என்பதற்காக வீட்டைச் சுற்றிப் பெரிய மதிலை எழுப்பினுன். அந்த வீட்டில் கூர்மனுடைய மனேவியும் அவனுடைய மகனும் ஒருவர் கண்ணுக்கும் தென்படாமல் தனியே இருந்து வந்தார்கள்.

பல வருடங்கள் கழித்துக் காசிக்குச் சென்ற கூர்மன் திரும்பி வந்தார். நேரே தொண்டைமானிடம் சென்ருர். " என் மனேவி பிரசவித்துவிட்டாளா ? என்ன குழந்தை பிறந்தது ? என் பையன் எப்படி யிருக்கிருன் ?" என்று தொண்டைமானேப் பார்த்துக் கேட்டார்.

அப்பொழுதுதான் பிராமணருடைய மனேவியையும் மகனேயும் தனி வீட்டில் வசிக்கச் செய்தது அவன் நினேவுக்கு வந்தது. அரச அலுவல்களில் மூழ்கிப்போன தொண்டைமான் அவர்களேப்பற்றி அறவே மறந்துபோனுன். ஆயினும் இதனே வெளிக்குக் காட்டிக்கொள்ளாமல், " ஐயா உங்கள் மனேவி சுகமாகப் பிரசவித்தாள். உங்களுக்கு ஒரு பெண் குழந்தை பிறந்திருக்கிறது. உங்கள் பையனும் குழந்தையும் நலமாக இருக்கிருர்கள். இன்றையபத்தினம் திருமலேயில் வேங்கடேசப்பெருமாளுக்கு விசேஷ பூஜை நடப்ப

தால் அரண்மனைப் பெண்களுடன் உன் குடும்பத்தினர் திருமலைக்குச் சென்றிருக்கின்றனர். விரைவில் வந்து விடுவார்கள் '' என்றான்.

கூர்மனும் வந்த களைப்புத் தீர உணவு உண்டு அதன்பின் உறங்கிவிட்டார்.

தொண்டைமான் தன் மகனை அனுப்பி அந்தப் பிராமணருடைய மனைவியும் குழந்தைகளும் எப்படி யிருக்கிறார்கள் என்பதைப் பார்த்துவரச் சொன்னான். சற்று நேரம் கழித்துச் சோகத்துடன் திரும்பிவந்த தொண்டைமானின் மகன், '' தந்தையே என்ன சொல்வேன்! அந்தப் பிராமணருடைய மனைவியும் குழந்தைகளும் இறந்துவிட்டார்கள். அவர்களுடைய எலும்புக் கூடுகள்தான் இருக்கின்றன '' என்று கூறினான்.

இதைக்கேட்டுப் பெரிதும் வருந்தினான் தொண்டைமான். 'ஐயோ! ஏழைப பிராமணருக்கு என்ன பதில் சொல்லுவேன். என்னை நம்பி அடைக்கலமாக விட்டுச் சென்றவர்கள் இறந்துபோய் விடும்படியாகச் செய்து விட்டேனே. இந்த விவரத்தை எப்படி ஏழைப் பிராமண ரிடம் தெரிவிப்பேன்?' என்று வருந்திய தொண்டைமான் நேரே திருமலைக்குச் சென்றான் வேங்கடாசல பதியின் கால்களில் விழுந்து கதறினான். கண்ணீர் விட்டு அழுதான். அவனுடைய துயரத்தைக் கண்டு பொறுக்கமாட்டாத வேங்கடேசர் அவன் முன் தோன்றி, '' தொண்டைமானே, நீ தவறான காரியம் செய்துவிட்டாய். உன்னிடம் அடைக்கலமாக விட்டுச் சென்றவர்களை இவ்வாறு இறந்து போகுமளவு விட்டது மாபெரும் பாவச் செயல். அதுவுமல்லாமல் பிராமணரிடம் பொய் பேசினாய். இதையெல்லாம்

பார்க்கும்போது உன்பேரில் எனக்கு வருத்தம்தான் ஏற்படுகிறது. ஆயினும் நீ என்னுடைய சிறந்த பக்தர்களில் ஒருவன். உனக்குத் துன்பம் வந்திருக்கும்போது அதைப் பார்த்துக் கொண்டிருத்தல் முறையாகாது. உன் மகனை அனுப்பி அந்தப் பிராமணருடைய மனைவி குழந்தைகளின் எலும்புகளை இங்கு கொண்டுவரச் செய்'' என்றார்

தொண்டைமானும் தன் மகனை அனுப்பிப் பிராமணர் மனைவியின் எலும்புக்கூட்டையும் அவருடைய குழந்தைகளின் எலும்புக்கூடுகளையும் அவ்விடம் கொண்டு வரச்செய்தான். வேங்கடாசலபதி அவ்வெலும்புகளைத் தமது உத்தரீயத்தினால் மூட்டையாகக் கட்டினார். வெளியே வந்தார் புஷ்கரணி தீர்த்தத்திற்குக் கிழக்கே பாண்டு தீர்த்தம் என்றொரு தீர்த்தம் இருந்தது. அதற்கும் பிறகு ஒரு புனித தீர்த்தம் இருந்தது. அங்குச் சென்றார். எலும்பு மூட்டையை ஒரு பாறையின் மேல் வைத்தார். அப்புனித தீர்த்தத்தில் இறங்கினார். கழுத்தளவு நின்றுகொண்டு அதிலிருந்து எலும்பு மூட்டையின்மீது நீரை வாரி இறைத்தார்.

உடனே பிராமணருடைய மனைவியும் பையனும் பெண் குழநதையும் தூக்கத்திலிருந்து விழித்தெழுந்தவர்கள் போல உயிர் பெற்று எழுந்தனர். அவர்களைத் தொண்டைமானிடம் ஒப்படைத்துவிட்டு. ''தொண்டைமானே, இனி ஒருவருடனும் நான் பேசமாட்டேன். உறுதியான பக்தி உள்ளவர்களிடம் மட்டுமே பேசுவேன். நீ சென்று வா'' என்று அவனை அனுப்பி வைத்தார்.

தொண்டைமான் நடந்த கதையைக் கூர்மனுக்கும் கூறி அவருடைய பெண்டு பிள்ளைகளை அவரிடம் சேர்ப்பித்தான்.

இதற்குப் பிறகு வேங்கடேசப்பெருமாள் தன்னுடன் பேசாமல் மௌனமா யிருப்பது தொண்டைமானுக்கு வருத்தத்தைத் தந்தது அவரைப் பேச வைப்பதற்கு என்ன செய்யலாம் என்று தொண்டைமான் பல முனிவர்களைக் கேட்டான். அவர்கள் "வேங்கடாசலபதிக்குத் துளசியின்மேல் பிரியம் அதிகம். ஆதலால், நீ நாள்தோறும் துளசியைக் கொண்டு எம்பெருமானை அர்ச்சனை செய்து வா" என்று கூறினுர்கள்.

தொண்டைமான் ஓர் அரசன். எனவே அவன் சாதாரண எளிய துளசியினுல் எம்பெருமானை வழிபடுவானு? தங்கத்தால் துளசியைச் செய்யச் சொன்னுன். அதைக் கொண்டு நாள்தோறும் வேங்கடேசப்பெருமாளை அர்ச்சித்து வந்தான்.

நாள்தோறும் அந்தத் தங்க மலர்களின்மீது மண்ணுல் செய்யப்பட்ட மலர்களும் காணப்பட்டன. இதைக் கண்டு வியப்படைந்த தொண்டைமான், "பிரபோ நான் தங்க மலர்களால் தங்களைப் பூசிக்கிறேன். அதே சமயத்தில் வேறு யாரோ தங்களை மண்ணுல் செய்த மலர்களால் அர்ச்சிக்கிருர். அப்படிபட்ட சிறந்த பக்தர் யாரென்று எனக்கு அறிவிக்க வேண்டும்' என்று வேங்கடாசலபதியைக் கேட்டுக் கொண்டான் தொண்டைமான்.

"இந்த வேங்கடமலைக்கு வடக்கே ஒரு கிராமம் இருக்கிறது. அங்கு பீமன் என்ருெரு குயவன் இருக்

கிருன். அவன் களங்கமற்ற உள்ளத்துடன் என்னை மண்ணுல் செய்த மலர்களால் பூசிக்கிருன். உன்னுடைய தங்க மலர்களைக் காட்டிலும் எனக்குப் பீமன் அர்ச்சிக்கும் மண மலர்களே விருப்பமுடைதாய் இருக்கிறது. நீ சென்று அவனைக் கண்டால் நீயே சிறந்த பக்தன என்கிற உனது அகந்தை நிர்மூலமாகும்'' எனருர்.

தொண்டைமானும் ஆணவம் நீங்கியவனுய் வேங்கடப்பெருமாள் குறிப்பிட்ட இடத்தை அடைந்தான். அவ்விடத்தில் சட்டி பானை செய்யும் இடத்தில் களிமண்ணைப் பிசைந்து கொண்டே உள்ளமுருக இறைவனை வழிபட்டுக் கொண்டிருந்தான் பீமன். தம்மை மறந்து இறைவனைத் தியானித்துக் கொண்டிருந்த பீமன் முன்னுல், கருடவாகனத்தின்மீது வேங்கடேசப் பெருமாள் தோன்றினுர். அவருடன் பத்மாவதி தேவியும் காட்சி தந்தார்.

பீமனைத் தம்மிடம் அன்பாக அழைத்தார். தம் ஆடை ஆபரணங்களை அவனுக்கு அணிவித்தார். குயவருடைய மனைவிக்குத் தன்னுடைய ஆடை ஆபரணங்களைப் பத்மாவதி தேவி அணிவித்தாள். இச் சமயத்தில் மேல் உலகத்திலிருந்து விமானம் ஒன்று அவர்களை அழைத்துச் செல்ல அவ்விடம் வந்தது. வேங்கடேசப்பெருமாளும் பத்மாவதி தேவியும் ஆசிகூற, பீமனும் அவன் மனைவியும் விமானமேறி மேல் உலகம் சென்றனர்.

இவற்றைக் கண்டு பரவசமடைந்த தொண்டைமான் வேங்கடாசலபதியின் திருவடிகளில் விழுந்து, ''பிரபோ எளியவர்க்கெல்லாம் அருள் புரிகிருய்.

நானும் பலகாலம் உன்னைப் பூசித்து வருகிறேன். எனக்கு அருள்புரிய மாட்டாயா'' என்று கதறிக் கேட்டுக்கொண்டான்.

"தொண்டைமானே, இவ்வுடலை விட்ட பிறகு நீ வேருெரு புனிதமான உடலைப் பெற்று, என்னைப் பூசித்து அதன் பின்னர் மோட்சத்தை அடைவாய்'' என்று கூறினுர்.

தொண்டைமான் வேங்கடாசலபதியின் சொற்படி சுவாமி புஷ்கரணி தீர்த்தத்தில் மூழ்கி எழுந்தான். அக்கணமே அவன் வேருெரு பிறப்பு வரப்பெற்ருன். அப் பிறப்பில் இறைவன் வேங்கடாசலபதியை உள்ள முருகப் பூசித்து அவர் திருவடியைச் சேர்ந்தான்.

8136
Q1:38



உ. கோவிலூர
KOVILOOR
MADALAYAM
மடாலயம்

## தெய்வத்தமிழ் நூல்கள்

செந்தமிழ் வித்தகர், தெய்வத்தமிழ்மணி
புலவர் சி. முத்துப்பிள்ளை எழுதியவை

அருள் சுரக்கும் சக்தி ஆலயங்கள்
விலை ரூ. 5·00

புகழ்மணக்கும் வைணவ தலங்கள்
விலை ரூ 5·00

சிறப்புமிக்க சிவாலயங்கள்
(அச்சில்) விலை ரூ. 5·00

சபரிமலை ஐயப்பன்
விலை ரூ. 2·00

நெ சி. தெய்வசிகாமணி எழுதியது
ஸ்ரீ வேங்கடேச மகாத்மியம்
விலை ரூ. 1.50

**பைலட் பப்ளிகேஷன்ஸ்**
தபால் பெட்டி எண் : 1545, சென்னை-600001.

ரவிசங்கர் பிரிண்டர்ஸ், சென்னை-600007.